20th January 1961]

THE HON. SRI C. SUBRAMANIAM : Yes, Sir.

SRI A. A. RASHEED : Sir, may I know whether there is any proposal to make it compulsory for the students to join National Cadet Corps?

THE HON. SRI C. SUBRAMANIAM : There is no such proposal under consideration now.

*Harijan colonies*

*** 36 Q.—SRI A. VEDARATHNAM :** கனம் பொது மாாமத்து அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) சுத்தமான ஹரிஜனக் காலனிகளுக்குப் பரிசு வழங்கும் திட்டம் பற்றிய விவரமென்ன ?

(இ) இச்செய்தி சேரிவாழ் மக்களுக்கு எட்ட என்ன ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது ?

THE HON. SRI P. KAKKAN : (அ) The neat and sanitarily well-maintained Harijan colony in each taluk is eligible for the award of prizes. The award of prize to the best Harijan colony will be in the shape of five Ambar Charkas or a Radio Set and will not cost more than Rs. 300 per taluk.

The selection of colonies will be made by the District Harijan Welfare Committee or any other District Level Committee acting on its behalf with due regard to the following aspects, viz :—

(i) keeping of houses clean,

(ii) keeping of surroundings clean,

(iii) keeping of streets, bathrooms, wells, latrines, schools, etc., clean, and

(iv) keeping the boys and girls clean.

( இ ) A press release was issued on 5th August 1960 which had appeared in the Tamil Dailies like Swadesamitran, Dinamani and Nava India. Besides this, the Collectors and the Director of Harijan Welfare have also been requested to give publicity to this scheme.

**SRI A. VEDARATHNAM :** ஸார், சேரி வாழ் மக்களுக்கு பத்திரிகை படிப்பதற்கு வசதிகள் மிக குறைவாக இருப்பதினுலும இதைப்படிக்கின்றவர்கள் குறைவாக இருப்பதினுலும் அங்கு அவர்களுக்கு பிரச்சாரம் மூலமாகவோ அல்லது நூண்டுப் பிரசுரங்கள் மூலமாகவோ இந்தப் பரிசு திட்டத்தைப்பற்றி அறிவிக்க சர்க்கார் முன்வருமா ? இந்தத் திட்டம் ஆரம்பித்தபின்னுல் எந்தெந்த சேரிகளுக்கு இந்தப் பரிசு கொடுக்கப்பட்டிருக்கிறது ?

**THE HON. SRI P. KAKKAN :** இதைப்பற்றி கிராமங்களில், சேரிகளில் நன்ருகப் பிரச்சாரம் செய்யப்பட வேண்டும் என்று அந்தந்த ஜில்லா கலக்டர்களுக்கு சொல்லப்பட்டிருக்கிறது. அவர்களும் அவ்விதமே செய்வார்கள் என்று நம்புகிறேன்.

[20th January 1961

**Sri M. K. SOMASUNDARAM**: ஸார், ஒவ்வொரு கிராமங்களுக்கும் போய் எந்த சேரி சுத்தமாக வைக்கப்பட்டிருக்கிறது என்று ஹரிஜன வெல்ஃபேர் கமிட்டி போய் சுற்றிப்பார்ப்பதற்கு ஏற்பாடு செய்து கொடுத்தால் சுத்தமாக வைக்கப்பட்டிருக்கும் கிராமத்தை தேர்ந்தெடுப்பதற்கு வசதியாக இருக்கும். ஆகவே இந்தக் கமிட்டி சுற்றிப்பார்ப்பதற்கு ஏற்பாடு செய்ய அரசாங்கம் முன் வருமா என்பதை கேட்க விரும்புகிறேன்.

**The Hon. Sri P. KAKKAN**: ஹரிஜன வெல்ஃபேர் கமிட்டிப் போய் சுற்றிப் பார்க்க முடியாது. பரிசுகளை நிர்ணயிப்பதற்கு இந்தக் கமிட்டியிடம் கேட்கப்படுகிறது. ஹரிஜன நல இலாகாவைச் சேர்ந்த அதிகாரிகள் போய் சுற்றிப்பார்த்து இவர்களுக்கு ரிப்போர்ட் கொடுப்பார்கள்.

**Sri K. B. S. MANI**: ஸார், இந்தப் பரிசுத்திட்டத்தை முதலில் மக்கள் புரிந்துக்கொள்ளக்கூடிய முறையில் டிஸ்ட்ரிக்ட் வெல்ஃபேர் ஆபீஸர் துண்டுப் பிரசுரங்கள்மூலம் பிரச்சாரம் செய்ய அனுமதிக்கப்பட்டிருக்கின்றனரா, மேலும் இந்தத் திட்டத்தில் ஒரு கிராமத்திற்கு என்று ஏதாவது தொகை ஒதுக்கப்பட்டிருக்கிறதா, அல்லது ஒரு தாலுக்காவுக்கு என்று ஒதுக்கப்பட்டிருக்கிறதா அல்லது மாகாணம் முழுவதிற்கும் சேர்ந்தாற்போல் ஒதுக்கப்பட்டிருக்கிறதா, இதற்காக எவ்வளவு தொகை ஒதுக்குவதற்கு அரசாங்கம் உத்தேசித்திருக்கிறது?

**The Hon. Sri P. KAKKAN**: என்னுடைய பதிலில் இதைப் பற்றி சொன்னேன். கனம் அங்கத்தினர் அவர்கள் அதை நன்றாக கவனிக்கவில்லைபோலும். முதலில் ஒவ்வொரு தாலூகாவுக்கு என்றுதான் நிர்ணயிக்கப்பட்டிருக்கிறது. இதற்காக 300 ரூபாய் ஒதுக்கப்படும். அதாவது 5 அம்பர் சர்க்கா அல்லது ஒரு ரேடியோ செட் கொடுப்பது என்று நிர்ணயிக்கப்பட்டிருக்கிறது. இதற்காக இந்த வருடம் 30 ஆயிரம் ரூபாய் ஒதுக்கப்பட்டிருக்கிறது.

**Sri B. DORAISAMI REDDIAR**: ஹரிஜன காலனிகளில் எந்த சேரி சுத்தமாக வைக்கப்பட்டிருக்கிறது என்பதை பார்ப்பதற்காக எங்கள் தொகுதியிலுள்ள எம்.எல்.ஏ.-க்களை எல்லாம் அழைத்துக் கொண்டு போய் காண்பித்தார்கள். கழிந்த 18-ம் தேதியன்று நாங்கள் போய் சுற்றிப்பார்த்தோம். சுத்தமாக வைக்கப்பட்டிருக்கும் சேரிக்கு 5 அம்பர் சர்க்கா அல்லது ஒரு ரேடியோ செட் பரிசாக கொடுப்பது என்று தீர்மானித்திருக்கிறார்கள். அதுவும் இல்லாவிட்டால் இதற்கென்று ஒதுக்கப்பட்டிருக்கின்ற 300 ரூபாயை வேறு ஏதாவது விதத்தில் உபயோகப்படுத்திக் கொள்ளலாம் என்றும் தெரிவித்திருக்கிறார்கள். இவ்விதம் கொடுப்பதற்காக எங்களை போன்ற எம்.எல்.ஏ.-களை அழைத்துக் கொண்டு போனார்கள்.

**Mr. SPEAKER**: இது கேள்வியாக இல்லையே?

20th January 1961]

SRI B. DORAISAMI REDDIAR : இவைகள் எல்லாம் நடந்த சம்பவங்கள், இவைகளை எல்லாம் சொன்னால்தான் எல்லோருக்கும் தெரியும். இவ்விதம் ஒவ்வொரு தாலுகாவுக்கும் கொடுத்து வருகிறார்கள் என்பதை தெரிவித்துக்கொள்கிறேன்.

MR. SPEAKER : இத்தனையும் சொல்லி இவைகள் எல்லாம் கனம் மந்திரி அவர்களுக்குத் தெரியுமா என்று கேட்டால் கேள்வி கேட்பதுபோல் இருக்கும்.

DR. (SRIMATHI) T. S. SOUNDARAM RAMACHANDRAN : இவ்விதம் ஹரிஜன குடியிருப்புகளுக்கு வெகுமதி கொடுக்கிற பொழுது எந்த காலனியிலிருந்து அதிகமான குழந்தைகளை பள்ளிக்கூடத்திற்கு அனுப்புகிறார்கள் என்பதையும் கணக்கிலெடுத்து வெகுமதி கொடுப்பதற்குரிய ஒரு அம்சமாக பரிசீலனை செய்ய முடியுமா என்பதை கேட்க விரும்புகிறேன்.

THE HON. SRI P. KAKKAN : காலனியை சுத்தமாக வைத்திருப்பதைப்பார்த்துத்தான் இப்போது பரிசுகள் வழங்க திட்டமிடப்பட்டிருக்கிறது. இதில் எத்தனை மாணவர்களை பள்ளிக்கூடங்களுக்கு அனுப்புகிறார்கள் என்பதை சேர்ப்பதற்கில்லை என்பதை தெரிவித்துக்கொள்கிறேன்.

SRI A. GOVINDASAMY : காலனிகளை சுத்தமாக வைத்திருந்தால் பரிசு கொடுக்கப்படும் என்று சொல்லுகின்ற நோத்தில் பல காலனிகள் சுடுகாட்டின் ஓரத்திலும் பள்ளத்தாக்குகளிலும் எற்படுத்தப்படுகின்றன. இதை தவிர்ப்பதற்கு அரசாங்கம் என்ன நடவடிக்கை எடுத்திருக்கிறது ?

THE HON. SRI P. KAKKAN : கனம் அங்கத்தினர் அவர்கள் இவ்விதம் இந்தச் சமயத்தில் சொல்வது நல்லதல்ல என்று நினைக்கிறேன். சுத்தமாக வைத்திருக்கும் காலனிகளுக்கு பரிசு கொடுக்கப்படும் என்று சொல்லும்போது அவைகள் சுடுகாட்டின் பக்கத்தில் ஏற்படுத்தப்படுகிறது என்று சொல்வது சரியல்ல. இவ்விதம் ஏற்படுத்தப்படுகின்ற காலனிகளுக்காக வேண்டிய இடங்கள் சுடுகாட்டின் பக்கத்தில் இருந்தால் அவைகளை அக்வொயர் பண்ணக்கூடாது என்று சொல்லப்பட்டுவருகிறது.

*Food-Zones.*

* 37 *Q.*—SRI S. M. ANNAMALAI : கனம் உள்விவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) உணவு தான்ய வகையில் சோனல் (zonal system) முறையை ஒழிப்பதற்கு மத்திய சர்க்கார் மாநில சர்க்காரின் ஆலோசனையைக் கேட்டார்களா ?

(இ) அப்படியாயின், மாநில சர்க்கார் அனுப்பிய பதிலின் விவரமென்ன ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (அ) No Sir.

(இ) Does not arise.